# பக்திப் பாடல்கள்

நீலா ராமமூர்த்தி

நீலா பப்ளிகேஷன்ஸ்
9, சீனிவாசன் தெரு, ராஜா அண்ணாமலைபுரம்,
சென்னை-28.

சமர்ப்பணம்

ஸ்ரீ காஞ்சி காமகோடி பீடாதிபதி ஜகத்குரு சங்கராச்சாரியார் அவர்களின் திருவடிக்கே இச் சிறு நூல் சமர்ப்பணம்.

இசைப் பேரறிஞர்
மதுரை மணி ஐயர்

6-D, கற்பகாம்பாள் நகர்,
மயிலாப்பூர், சென்னை-4.

ஸ்ரீமதி நீலா ராமமூர்த்தி அவர்கள் இயற்றியுள்ள பக்திப் பாடல்களை அவரே நேரில் பாடக் கேட்டேன். அவர் ஸ்ரீ மகா கணபதி, முருகன், சிவன், அம்பாள் முதலிய எல்லா தெய்வங் களின் பேரிலும் பாடல்களை இயற்றியிருக்கிறார். எல்லா ராகங்களிலும், எல்லா நடைகளிலும் நவீன வர்ண மெட்டுக் களிலும் ராகபாவத்துடன், பாடல்களை இயற்றியிருக்கிறார் கள். ஸ்ரீ சீதா கல்யாண நாட்டிய நாடகமும் இயற்றி யிருக்கிறார்கள். இவைகளெல்லாம் ரொம்ப நன்றாக இருக் கின்றன. இவைகளைப் பாடம் செய்து பாடினால் ரொம்ப நன்றாக இருக்கும். இப்படி உயர்ந்த பக்திப்பாடல்களை இயற்றியுள்ள ஸ்ரீமதி நீலா ராமமூர்த்தி அவர்களை மனப் பூர்வமாகப் பாராட்டுகிறேன்.

மதுரை மணி அய்யர்

ராதா ஜெயலக்ஷ்மி

பண்டை காலம் முதல் பக்தர்கள் இறைவனை இன்னிசை யால் பாடி வழிபட்டு வருகின்றனர். அவ்வகையில் பக்திப் பாடல்கள் பல புனைந்துள்ள ஸ்ரீ பாபநாசம் சிவன் அவர்கள் தம்முடைய நெஞ்சுருக்கும் இனிய பாடல்களால் கர்நாடக சங்கீத உலகில் தமக்கென சிறப்பானதோர் இடம் பெற் றிருக்கிறார். தந்தையிடம் உள்ள திறமையை அவருடைய மகள் ஸ்ரீமதி நீலா ராமமூர்த்தி அவர்களும் கலைவாணியின் அருளால் நிரம்பவும் பெற்றிருக்கிறார்.

பாட்டுகள் அமைப்பது என்பது எளிதல்ல. அதற்குத் தேவையான இசை ஞானமும், மொழியில் வல்லமையும் ஸ்ரீமதி நீலா ராமமூர்த்தி அவர்களிடம் ஒருங்கே அமைந் திருக்கின்றன. இவருடைய பாடல்களில் பக்தி ரஸம் பூரண மாக நிரம்பியிருக்கிறது. அம்மாதிரி பாடல்களை பக்தி

உணர்ச்சி மிகுந்து பாடும்போது கடவுளை நேரில் காண்பது போன்ற நிலையடைந்து நாம் அளவிலா ஆனந்தத்தை அடைகிறோம். முன்பே வந்துள்ள ஸ்துதி மணிமாலை, கிருஷ்ண பிரேம கானம் மூலம் பெரும் புகழ் பெற்ற இவர் இந்த மூன்றாவது புத்தகமான பக்திப்பாடல்களையும் சிறப்பாக அமைத்திருக்கிறார். முறையே விக்னேஸ்வரர் துதி, ஸ்ரீ வெங்கடாசலபதி, மற்றும் அம்பாள், சிவன், முருகன், ஐயப்பன், சாயிபாபா தவிர சங்கீத மும்மூர்த்திகளான ஸ்ரீ தியாகராஜர், தீக்ஷிதர், ச்யாம சாஸ்திரி இவர்களைப் புகழ்ந்து ஒரு அழகான பாடலையும், கடைசியாக சீதா கல்யாண நாட்டிய நாடகம் ஒன்றையும் இசை வடிவமாக இயற்றியுள்ளார்.

பக்தி மேன்மேலும் பெருகி இறைவனை ஆராதிக்க இசை ஒரு நல்ல சாதனமாகும். ஆகையால் எல்லாவற்றிற்கும் நற்பலனைத்தரும் இந்த பக்திப்பாடல்களை புனைந்து, அவைகளை எல்லோரும் பாடி மகிழ்ந்து, எல்லாம் வல்ல இறைவனருள் பெற வேண்டும் என்ற நோக்கத்துடன் இப் புத்தகத்தை வெளியிட்டிருக்கிறார்.

கலை உலகிற்கு ஸ்ரீமதி நீலா ராமமூர்த்தி அவர்களின் ஸேவை என்றென்றும் தொடர்ந்து இருப்பதுடன் அவர் நீடூழி காலம் வாழ்ந்து மேன்மேலும் புகழ் அடைய வேண்டுமென்று பகவானை ப்ரார்த்தித்துக் கொள்கிறோம்.

ராதா ஜெயலஷ்மி

எஸ். இராமநாதன்,

20/1, சைடோஜித் தெரு,
திருவல்லிக்கேணி,
சென்னை-5.

“குலவித்தை கல்லாமற் பாகம் படும்” என்ற பழமொழியை மெய்ப்படுத்துவதுபோல் இசைப் பேரறிஞர் பிரம்ம ஸ்ரீ பாபநாசம் சிவன் அவர்களின் மகளாகிய ஸ்ரீமதி நீலா ராமமூர்த்தி அவர்கள் 50 பக்திப்பாடல்களை இயற்றி இப்போது

வெளியிடுகின்றார். இவர் ஏற்கனவே பல இசைப்பாடல்களை இயற்றி இசை உலகிற்கு அறிமுகமானவர். இந்நூலில் விநாயகர், சிவபெருமான், முருகன், ஐயப்பன், கண்ணன் முதலிய தெய்வங்கள் மீது பாடியுள்ள கீர்த்தனங்கள் சொற்சுவை, இசைச்சுவை பொருந்தி அமைந்துள்ளன. "வைரமணி" என்று தொடங்கும் ஊஞ்சலும், "ஆராரோ" என்று தொடங்கும் தாலாட்டும் புதிய வண்ண வடிவங்கள். இதன் கண் பல கர்நாடக ராகங்களும், திலங், ஸோஹினி, ஜோன்புரி போன்ற ஹிந்துஸ்தானி ராகங்களும் கவர்ச்சிகரமாய்க் கையாளப்பட்டுள்ளன.

நூலின் இறுதியில் சீதாகல்யாணம் இசைப் பாடல்கள் வடிவில் சேர்க்கப் பெற்றிருக்கிறது. இது பல விடங்களில் நாட்டிய நாடகமாக நடிக்கப் பெற்றுப் பலரின் பாராட்டைப் பெற்றிருக்கிறது.

ஆசிரியை வெளியிட்டுள்ள "ஸ்துதி மணிமாலை", "கிருஷ்ண பிரேம கானம்" என்ற நூல்களிலும், இப்போது வெளிவரும் இந்த நூலிலும் உள்ள இசைப்பாடல்களை வித்வான்களும், விதுஷிகளும் பெருவாரியாகப் பாடவேண்டும் என்பது என் விருப்பம்.

எஸ். இராமநாதன்

பழனி விஜயலக்ஷ்மி
13/6, கோபதி நாராயணஸ்வாமி செட்டி தெரு,
மயிலாப்பூர், சென்னை-4.

திருமதி நீலா ராமமூர்த்தி அவர்கள் இயற்றிய பக்திப் பாடல்களைக் கேட்டபோது அவரது தந்தையிடம் நிறைந்துள்ள மேதையின் சாயல் ஆங்காங்கே புலப்பட்டது. பாடிப் பாடி பாடல்கள் மெருகேறி விட்டால் நீலா ராமமூர்த்தி அவர்களின் பாடல்கள் மிக உயர்ந்த ஸ்தானத்தை அடையு

மென்பதில் சந்தேகமில்லை. அதற்கான ஆதாரச்சிறப்புகள் அவர் பாடல்களில் மலிந்து கிடக்கின்றன.

இவர் ஏற்கனவே வெளியிட்ட ஸ்துதி மணிமாலை, க்ருஷ்ண ப்ரேமகானம் முதலிய நூல்கள் மிகவும் அழகாக அமைந்துள்ளன.

இவர் இசைப்பணி பூரண பலன் பெற்று தமிழ் இசை வளர்ச்சிக்கும் பலமூட்டும் என்பது என் நம்பிக்கை. முருகனின் அருள் இப்பணியில் இவருக்கு நிறைவுடன் கிட்டுமாறு அம் முருகனையே வேண்டுகிறேன்.

பழனி விஜயலக்ஷ்மி

'இசைமணி'
சீர்காழி எஸ். கோவிந்தராஜன்

8-வது டிரஸ்டு
கிராஸ் தெரு,
மந்தவெளிப்பாக்கம்,
சென்னை-28.

"இசைப் பேரறிஞர்" உயர்திரு பாபநாசம் சிவன் அவர்களின், திருமகளார் திருமதி நீலா ராமமூர்த்தி அவர்கள் இயற்றி உள்ள பக்திப் பாடல்களை கேட்டேன். தந்தையாரது வழியைப் பின் பற்றி அருமையாக இயற்றி உள்ளார்கள். முன்னாலே வெளியிட்ட "கிருஷ்ண பிரேமகானம்" பாடல்களையும் பார்த்தேன். இவர்களது பணி சிறக்க, வாழ, வளர ஆண்டவனை வேண்டுகிறேன்.

அன்பன்,
சீர்காழி எஸ். கோவிந்தராஜன்

# முன்னுரை

உலக மாயையிலேயே மூழ்கித்திளைக்கும் நாம் கடைத்தேற பக்தியே சிறந்த வழி. ஆதிகாலம் போல் தவக்கோலம் பூணவோ க்ஷேத்ராடனம் செல்லவோ கடுமையான விரதம் பூஜை புனஸ்காரம் அனுஷ்டிக்கவோ வேண்டாம்! இறைவனுக்கே அர்ப்பணமான இசைக்கலையில் மனதை லயிக்கச் செய்து விட்டால் போதும் என்பர் பெரியோர்

தெய்வீகத்தன்மை வாய்ந்த மகாத்மாக்களெல்லாம் பாடி இருக்கிறார்கள்; இன்றும் பாடுகிறார்கள். பெரிய பூமாலையில் ஒரு மிகச் சிறிய பூவென நான் அமைத்துள்ள சில பாடல்களையும், எல்லாம் வல்ல இறைவனுக்கு அர்ப்பணிக்கத் துணிந்துள்ள நான் அவன் ஆசியையும் ரசிக உள்ளங்களின் ஆதரவையும்தான் வேண்டுகிறேன்.

இன்றைய சங்கீத உலகின் பஞ்ச ரத்னங்களாக விளங்கும் ஸ்ரீ மணி அய்யர், ராதா ஜயலக்ஷ்மி, S ராமனுதன் பழனி விஜயலக்ஷ்மி, சீர்காழி S கோவிந்தராஜன் முதலிய பெரியோர்களின் ஆசி உரையுடன் கூடிய பக்திப்பாடல்கள் என்ற இச்சிறுநூல் சிறப்புடன் வெளிவரப் பெரிதும் உதவும் ஸ்ரீ சேத்தூர் கூத்தன் அவர்களுக்கும். பாரதம் பிரஸ் அதிபருக்கும் என் மனமார்ந்த நன்றி.

லீலா ராமமூர்த்தி

# அட்டவணை

| எண் | பெயர் | ராகம் | தாளம் |
|---|---|---|---|
| 1. | சித்திவிநாயகனே | மாயாமாளவம் | ரூபகம் |
| 2. | சகல கலாவாணியே | காபி | ஆதி |
| 3. | திருப்பதி மலை மேலே | தோடி | ,, |
| 4. | மனமே நீ நினையாயோ | செஞ்சுருட்டி | ,, |
| 5. | பாடிப்பணிந்தால் | கல்யாணி | சாபு |
| 6. | ஈசனை நினை | தன்யாசி | ஆதி |
| 7. | விரிசடைக் கடவுள் | பூரி கல்யாணி | ,, |
| 8. | சந்திரசேகரனே | கர கரப்ரியா | ரூபகம் |
| 9. | வானவில்லே | சக்ரவாகம் | ,, |
| 10. | மனம்போன | சகானா | ஆதி |
| 11. | அப்பனைபாடு | காம்போதி | ,, |
| 12. | வேலனை சில | ஆனந்த பைரவி | மிச்ரசாபு |
| 13. | கோயில் கொள்வான் | ஹேமவதி | ஆதி |
| 14. | குறை எவர்க்கும் | ஆபோகி | ,, |
| 15. | ஆறுமுகன் நேரில் | சுப பந்து வராளி | ,, |
| 16. | இருக்கும் இடம் | ஆரபி | ,, |
| 17. | பழனி மலையில் | ஹிந்தோளம் | ரூபகம் |
| 18. | நினைத்ததெல்லாம் | பந்துவராளி | ஆதி |
| 19. | கந்த வடிவேலன் | சிந்து பைரவி | ,, |
| 20. | மாலழகர் வீதியிலே | வசந்தா | ,, |
| 21. | சாயிராம நாமம் | தேஷ் | ,, |
| 22. | திருமால் அழகன் | பீம்ப்ளாஸ் | ,, |
| 23. | வரமருள் வரலக்ஷ்மி | பிலகரி | ,, |
| 24. | அம்மா அம்மா | சிவரஞ்சனி | ,, |
| 25. | நவசாலபுரி | லதாங்கி | ,, |
| 26. | மனம் இரங்கி | ஹிந்துஸ்தான் காபி | ,, |
| 27. | ஏனிந்த மௌனம் | புன்னாகவராளி | ரூபகம் |
| 28. | நம்பிக்கை | மத்தி மாவதி | ஆதி |
| 29. | பிறந்த பயன் | ஜோன்புரி | ,, |

| | | |
|---|---|---|
| 30. காமாக்ஷி கருணாகரி | கர்னாடக சுத்த சாவேரி | ரூபகம் |
| 31 அகிலாண்ட நாயகியே | மலய மாருதம் | ஆதி |
| 32. உன்னடிப் போற்று கின்றேன் | துர்கா | ரூபகம் |
| 33. வைரமணிப்பந்தலிலே | நவ்ரோஜ் | ,, |
| 34. பக்தவத்சலன் | பாகேஸ்வரி | ,, |
| 35. பண்டரி நாதன் | ஹம்ஸானந்தி | ,, |
| 36. போகலாம் வாரீர் | நாதநாமக்ரியா | ,, |
| 37. ஆராரோ ஆரிராரோ | கர்னாடக தேவ காந்தாரி | ஜம்பை |
| 38. திருப்பாவை தன்னை | சந்திர கௌஸ் | ஆதி |
| 39. நாளிதுவே நல்ல | ராகமாலிகை | ,, |
| 40 மனமோகன | திலங் | ,, |
| 41. சொல்ல சொல்ல | சோஹினி | ,, |
| 42. தீனசரண்யனே | விஜய நாகரி | ,, |
| 43. உன்னைச்சில | ரஞ்சனி | ,, |
| 44. குழல் ஊதி | ராக மாலிகை | ,, |
| 45. அருளே நீ | ஷண்முகப்ரியா | ,, |
| 46. கண்ணன் மணி | ஹமீர் கல்யாணி | ஜம்பை |
| 47. மோகன ஸ்யாம | ப்ருந்தாவன சாரங்கா | ஆதி |
| 48. நிஜசுகம் | சிந்து பைரவி | ,, |
| 49. சங்கீத சாகரத்தின் | ராக மாலிகை | ,, |
| 50 மங்களமே தரும் | சுருட்டி | ,, |

## சீதா கல்யாண நாட்டிய நாடகப் பாடல்

## விநாயகர் துதி

1

**ராகம்—மாயாமாளவம்** **தாளம்—ஆதி**

பல்லவி

*சித்தி விநாயகனே எனக்கருள்*
*செல்வ விநாயகனே வர* (சி)

சரணங்கள்

*பக்தியுடன் உன்னைப்பாடி துதித்திட*
*சக்திசிவன் பெற்ற உத்தமனே அருள்* (சி)

*துங்க கரிமுகத்தைங்கரனே உந்தன்*
*பங்கஜமலர் பதமே நீ தந்தருள்*

*மோதகப்ரியனே மூல முதல்வனே*
*நாதப்ரணவ ஸ்வரூபனே நீ அருள்*

2

## கலைமகள் துதி

**ராகம்—காபி** **தாளம்—**

பல்லவி

*சகலகலாவாணியே சரஸ்வதியே*
*சரணடைந்தேன் அம்மா சந்ததமும் அருள்* (ச)

அனுபல்லவி

*புகலிடம் தந்தென தகம்தனிலே இருந்து*
*பொங்கும் மங்களம் தன்னை என்றும் அருள் அம்மா* (ச)

சரணம்

வாணியே வேணியே நித்யகல்யாணியே
வானவரும் புகழ் புஸ்தகபாணியே
மாணிக்கவல்லியே மலரயன் தேவியே
மரகத ஸ்யாமள வடிவழகியே அம்மா (ச)

3

## வெங்கடேசர் துதி

ராகம்—தோடி தாளம்—ஆதி

பல்லவி

திருப்பதி மலைமேலே இருக்கின்ற பெருமானே
திருமகள் அலர்மேலு மனமகிழ் அழகோனே (தி)

அனுபல்லவி

விருப்பமுடன் வந்தோர்க் கருள்தரும் ஐயனே
வரதனே ஸ்ரீனிவாச வேங்கடநாயகனே (தி)

சரணம்

ஏழுமலைவாசனே என்றும் அன்பர் நேசனே
எங்கும் நிறை ஈசனே மங்கள ஸ்வரூபனே
வாழும் வழிசொல் எனக்கு வைகுந்தவாசனே
வகையறியாமலே பிழைபல செய்தேனே (தி)

4

ராகம்—செஞ்சுருட்டி தாளம்—ஆதி

## சிவஸ்துதி

பல்லவி

மனமேநீ நினையாயோ என்றேனும் (ம)

சரணங்கள்

கனவினிலே வரும் காக்ஷியைப் போல்யாவும்
கண்டதும் மறைந்திடும் உண்மையிதாதலால் (ம)
ஆசையும் பாசமும் கொண்டிருந்த உலகிலே
அலைந்துழலாமல் தில்லை அம்பலவாணனை (ம)
இகத்திலும் பரத்திலும் இன்பமோடிருக்க
இது ஒன்றுதான் வழிஎன்பதையே உணர்ந்து (ம)

5

ராகம்—கல்யாணி தாளம்—சாபு

பல்லவி

பாடிப்பணிந்தால் நலமே பெறலாமே நாம்
பரவசநிலை அடைந்தே என்றும் (பா)

அனுபல்லவி

ஆடும் அரசனை அம்பலவாணனை
அம்பிகை பாகனை அனுதினமும் நினைந்தே (பா)

சரணம்

பாதிமதி அணிந்தவனை பக்தர்உள்ளம் கொண்டவனை
பன்னிருகை வேலவனை பெற்றவனை சிவனை
ஆதியந்தமில்லாத ஜோதி கபாலியை
அன்பர்க்கு அன்பனை அகிலாண்ட நாயகனை (பா)

6

ராகம்—தன்யாசி தாளம்—ஆதி

பல்லவி

ஈசனை நினைமனமே ஸ்ரீ ஜக (ஈ)

### அனுபல்லவி

ஈசனே சிதம்பரவாசனே ஸ்ரீபர
மேசனே சித்சபேசனே நடேசனே (ஈ)

### சரணம்

பாசமகல அவன் பாதமலர் பணிந்
தாடிப்பாடி அருள் தேடிக்கொள்வாயே
தாசஜன ஹ்ருதய வாசனே சிவகாமி
நேசனே தில்லை நடராசனே சபேசனே (ஈ)

## 7

**ராகம்—பூரிகல்யாணி** **தாளம்—ஆதி**

### பல்லவி

விரிசடைக் கடவுள் திருவருள் உனக்கு
இருக்குது மனமே இனி அஞ்சாதே (வி)

### சரணங்கள்

திரிபுரம் எரித்தவன் உமையவள் பாகன்
தில்லையம்பலத்தாடும் நடேசன் (வி)
பரகதிக்கென ஒருவழியை நீயும்
தேடி அலையாதே இனி (வி)
அரன்சிவன் கங்காதரன் அருள்பெறவே
அனுதினமும் துதித்தவன் புகழ்பாடு (வி)

## 8

**ராகம்—கரகரப்ரியா** **தாளம்—ஆதி**

### பல்லவி

சந்திர சேகரனே உந்தனருள் (ச)
எந்தனுக்கும் வருமோ

அனுபல்லவி

சுந்திர கங்கையை செஞ்சடையில் வைத்து
எந்த நேரமும் உமைதன்னோடு ஆடிடும் (ச)

சரணம்

ஷண்முகன் தந்தனிடம் உபதேசம் பெற்றவனே
வந்தருள் செய்வாய் என்சிந்தை குறையற
அந்தமும் ஆதியும் இல்லாத உன்னையே
சந்ததமும் பணிந்தன்புடன் போற்றவே (ச)

9

ராகம்—சக்ரவாகம் தாளம்—ஆதி

பல்லவி

வானவில்லைப்போலவே மாறும் இந்த உலகமே
வருந்தும்முன்னே அறிந்துகொள் நீ பேதை
எந்தன் நெஞ்சமே (வா)

அனுபல்லவி

இன்பமும் துன்பமும் கலந்துதான் வந்திடும்
எந்நிலையும் ஆயினும் தாங்கிடவும் வேண்டுமே (வா)

சரணம்

மனத்தினிலே உறுதியும் வாக்கினிலே இனிமையும்
செயலினிலே தூய்மையும் இருந்துவிட்டால்போதுமே
உனது உள்ளக்கோயிலில் இருந்திட பரமேசனும்
வந்திடுவான் தேவியுடன் திண்ணமிது ஆதலால் (வா)

10

ராகம்—சகாரு தாளம்—ஆதி

மனம்போனப் போக்கெல்லாம் போகாதே
பெண்ணே—அதன்—மாயை வசப்பட்டு உழலாதே
பெண்ணே
கணமேனும் நினையாமல் மந்திபோல் பெண்ணே
பாய்ந்தோடும் எங்கெங்கோ ஆதலால் பெண்ணே
உண்மையில் நலம் தந்து காப்பது பெண்ணே
அந்த சிவநாமம் சொல்வது ஒன்றுதான் பெண்ணே
தன்மையும் தீமையும் அவன் செயல் பெண்ணே
உன்னுள்ளம் தனில் என்றும் பக்தியும் வேண்டும்
பெண்ணே

11

## ஐயப்பன் துதி

ராகம்—காம்போதி தாளம்—ஆதி

பல்லவி

அப்பனை பாடு நெஞ்சே நீ நிதம் (அ)

அனுபல்லவி

அப்பனை பாடுவதே ஆனந்தமாகுமே
அன்புடனே அவன் அருள் புரிவானே (அ)

சரணம்

பலதெய்வம் இருந்தாலும் பதம்பணிவோர்கெல்லாம்
பரம கருணையுடன் வரமருள்வானே
குலதெய்வமாக நீயும் கொண்டாடினுல் ஒரு
குறையும் வராது உன் வாழ்வினிலே என்றும் (அ)

12

## முருகன் துதி

ராகம்—ஆனந்தபைரவி தாளம்—மிச்ரசாபு

பல்லவி

வேலனே சிவபாலனே வடி (வே)

அனுபல்லவி

கோலமாமயிலில் ஏறிவரும்
குமரேசனே வள்ளிநேசனே வடி (வே)

சரணம்

மால்மருகனே குகனே சரவண
பவனே வருவாய் அருள்வாய்
ஆலமுண்டவர்க்குபதேசம் செய்த
குருநாதனே மலர்பாதனே வடி (வே)

18

ராகம்—ஹேமவதி தாளம்—ஆதி

பல்லவி

கோயில் கொள்வான் தன்னை கொண்டாடுவோர்களின்
உள்ளத்திலே என்றும் வள்ளிமணாளன் (கோ)

அனுபல்லவி

தாயினைப் போலவே பரிந்தருள்வானே
தரணியிலே இவன் போலொரு தெய்வம் உண்டோ
(கோ)

சரணம்

மாய இருளகல மனமும் நிலைபெற
ஓய்வும் ஒழிவும் இன்றி அவன்புகழ் பாடுவாய்
நாயினும் கடையேன் நான் ஆயினும் உன்னையே
நம்புறேன் வந்தருள் என்றுரைத்தாலே (கோ)

14

ராகம்—ஆபோகி தாளம்—ஆதி

பல்லவி

குறை எவர்க்கும் இல்லை மனமே
குக சரவணபவ என்று சொன்னாலே (கு)

அனுபல்லவி

குறமகளை மணந்த குமரனை நினைந்தால்
நிறைந்திடுமே இன்பம் பிறந்திடுமே மன (கு)

சரணம்

அரவணிந்தசிவன் அரும்புதல்வன் தன்னை
அனவரதமும் துதித்தடிப் பணிந்தாலே
பரமபதம் தந்து பக்கத்திலே நின்று
பரிவுடனே என்றும் அருள்தருவான் இனி (கு)

15

ராகம்—சுபபந்துவராளி: தாளம்—ஆதி

பல்லவி

ஆறுமுகன் நேரில் வருவான் அஞ்சாதிரு
ஆறுபடை வீடிருந்தும் அன்புடனே உன்னைத் தேடி (ஆ)

அனுபல்லவி

வீறுக்கொண்டெழுந்து வந்த சூரனை சம்ஹாரம் செய்த
சுப்ரமண்ய வேலன் பதம் தன்னைப் பணிந்தாலே (ஆ)

சரணம்

கோவில் தோறும் சென்று நீயும் தேட வேண்டாம்
அந்த
குமரன் இருப்பதெல்லாம் உந்தன் உள்ளத்தில்
ஆவினன் குடியில் வாழும் தேவனருள் வேண்டி நிதம்
ஆடி பாடி பக்தி பண்ணி பரவசநிலையுற (ஆ)

16

ராகம்—ஆரபி தாளம்—ஆதி

பல்லவி

இருக்கும் இடம் தெரிந்தால் நீ
என்ன செய்வாய் மனமே முருகன் (இ)

சரணங்கள்

திருக் கயிலாசலத்துறையும் சிவன் தந்த
திருத்தணி வேலன் தயாகரன் குகன் (இ)
செருக்கொழிந்தே இருகரம் தன்னை தூக்கியே
சரணம் என்பாயோ நீ மனமே (இ)
கருணையுடன் உனதருள் தரவேண்டும் என்
றனவரதமும் துதிப்பாயோ இனிமேல் (இ)

17

ராகம்—ஹிந்தோளம் தாளம்—ரூபகம்

பல்லவி

பழனி மலையில் இருக்கிறான் பக்தர்க்கெல்லாம்
அருள்புரியதன் (ப)

அனுபல்லவி

பழனி மலையில் அழகு மயிலில்
பாலசுப்ரமண்யன் வேலன் சரவணன் (ப)

சரணம்

தேவாதி தேவரும் தேடியே கொண்டாடும்
தேவர் சிகாமணி தண்டபாணியாக
மூவுலகம் போற்ற சேவல் கொடியுடன்
மாநிலத்தை காக்கும் மாபெரும் தெய்வமாய் (ப)

18

ராகம்—பந்துவராளி தாளம்—ஆதி

பல்லவி

நினைத்ததெல்லாம் நடக்கும் அந்த
குமரன் அருள் இருந்தால் நெஞ்சே (நி)

சரணங்கள்

அனைத்தும் அவன் செயல் என்றுணர்ந்தாகிலும்
அன்புடனே பணிவாய் நெஞ்சே (நி)
வினைமயமான இவ்வுலகச் சுழலிடை
உழன்று விடாமலே நீ நெஞ்சே (நி)
மனமெனும் மாய இருள்தன்னை விட்டுநீ வந்தால்
மால்மருகன் அருள்வான் நெஞ்சே (நி)

19

ராகம்—சிந்துபைரவி தாளம்—ஆதி

கந்தவடிவேலன் வந்தென்
கண்முன்னே நின்ருன் உந்தன்
கவலையெல்லாம் தீருமென்று
காதிலே சொன்ஞன்
சிந்தையெல்லாம் இன்பமய
மாகும்போதிலே அந்த
சேவற்கொடியோன் குகனும்
மெல்லச் சிரித்தான்
தேவயானை வள்ளியம்மை
தன்னை மணந்த தமிழ்
கடவுள் வேலன் ஷண்முகன் என்
மனதில் நிறைந்தான்
தெள்ளு தமிழ் பாடலுடன்
என்னைத் துதிப்பாய் என்ருன்
தந்திடுறேன் நல்லவரம்
என்றும் நான் என்பான் (க)

20

## அழகர் துதி

ராகம்—வசந்தா தாளம்—ஆதி

பல்லவி

மாலழகர் வீதியிலே பவனிவரும் வேளையிதே
மணமிகுந்த மலர் எடுத்து தொடுத்திடுவாய் என் சகியே
(மா)

அனுபல்லவி

சோலையிலே நாளொருநாள் அமர்ந்திருக்கும்
போதினிலே
சொந்தமாக என்னை கொஞ்சம் வந்து சேர்ந்தார் கனவு
போலே (மா)

சரணம்

அவர் என்னையே மறந்தாலும் நான் அவரை மறவேனே
அருகில் வரும்போதில் இன்பம் அடைந்திடுவேன் அது
போதும்
இவர் எனக்கு அன்பர் என்றால் எள்ளி நகைப்பாரும்
உண்டு
என்னிதயம் தன்னைவிட்டு இனியும் போக முடியுமோ
சொல் (மா)

21

## சாயிபாபா துதி

ராகம்—தேஷ் தாளம்—ஆதி

பல்லவி

சாயிராமநாமம் தன்னை பஜிமனமே இன்றே
சாயுஜ்யமே வரும் உண்மையிலே (சா)

அனுபல்லவி

வாயினால் பாடியும் மனதினால் சிந்தித்தும்
வந்தனையும் செய்தால் உந்தன் வினை தீரும் (சா)

சரணம்

கலியுகம் தன்னிலே கண்கண்ட தெய்வமாய்
விளங்குகிருன் என்றும் அருள்புரிய
அலைகடல் துரும்பென அலைந்திடும் உள்ளமும்
ஆனந்த வெள்ளத்தில் நீந்திடும் அன்ருே (சா)

22

## அழகர் துதி

ராகம்—பீம்ப்ளாஸ் தாளம்—ஆதி

பல்லவி

திருமாலழகன் வருவான் என்றே
தவமே நானும் புரிந்தேனே தோழி (தி)

அனுபல்லவி

இரவும் பகலும் அவனது நினைவே
ஏழைஎன் நெஞ்சில் நிறைந்தானே (தி)

சரணம்

வருவான் வருவான் என்றே நானும்
வழிமேல் விழி வைத்திருந்தேனே
தருவான் தருவான் அருளே என்று
திருணமதை நான் பார்த்திருந்தேனே (தி)

23

## வரலக்ஷிமி துதி

ராகம்—பிலகரி தாளம்—ஆதி

பல்லவி

வரமருள் வரலஷ்மி எனக்கு நல் (வர)

அனுபல்லவி

திருமகளே உன்னை தினமும் தொழும்என்னை
ஒருகுறையும் இன்றி வாழ்ந்திடுவாய் என்று (வர)

சரணம்

சீருடன் சிறப்புடன் பேருடன் புகழுடன்
செல்வமுடன் கல்வி அன்பும் அருளுடன்
ஓர் உருவாய் அமைய உலகில் நலமடைய
நீ அருள்வாய் எந்தன் உள்ள மெல்லாம் மகிழ (வர)

24

## தேவி ஸ்துதி

ராகம்—சிவரஞ்சனி தாளம்—ஆதி

பல்லவி

அம்மா அம்மா அம்மா தயை புரிவாய் நீ (அ)

சரணம்

அன்னை உன் போலே அருள் செய்யயாரே
எனக்கிந்த உலகினிலே பராசக்தி (அ)

உன்னையே நம்பிடும் என்னையும் காத்திட
உவந்துநீ வந்தருள்வாய் பராசக்தி (அ)
என்ன பிழை செய்தாலும் உன்மகன் நான் அன்றோ
இரங்குவதுன் கடனே பராசக்தி (அ)

25

ராகம்—லதாங்கி தாளம்—ஆதி

பல்லவி

நவசால புரிதன்னில் வாழும் அம்ப
நம்பினேன் உன்னையே நாராயணி (ந)

அனுபல்லவி

புவனேசுவரி சிவசங்கரி
புகல் உந்தன்பதம் அன்றி எனக்கு இல்லை (ந)

சரணம்

பரதேவதையே வரமருள் வாயே
பரிவோடு வந்து என்னை காத்திடுவாய்
அரன்பாரியே உன் அருள் எனக்கென்றும்
இருந்திட வேண்டும் எனதன்னையே (ந)

26

ராகம்—ஹிந்துஸ்தான் காபி தாளம்—ஆதி

பல்லவி

மனம் இரங்கி அருள் மாமதுராபுரி வாழும்
மனோன்மணியே அம்ப (ம)

அனுபல்லவி

கலைகடல் சூழ் உலகில் காப்பவர் இல்லையம்மா
கருணையோடுனதருள் தந்து வந்தாளம்மா (ம)

சரணம்

நிலையிலா வாழ்வையே நிலை என நம்பியே
அலைகடல் போல் உள்ளம் அலைந்துழன்றேனே
மலையரசன் பெற்ற மாமணியே உமையே
இல்லை என்று சொல்லாமல் ஏழை என்மீது (ம)

27

**ராகம்—புன்னாகவராளி** **தாளம்—ரூபகம்**

பல்லவி

ஏனிந்த மௌனம் அம்மா பராசக்தி (ஏ)

சரணங்கள்

நானும் உன் சேயன்றோ என்னையும் காத்திட
நீயும் விரைந்து வந்தாலன்றோ நலமே (ஏ)
வானவரும் புகழ் தேவி அபிராமி
ஞானஸ்வரூபிணி ஆனந்தபைரவி (ஏ)
தீனதயாபரி தேவி மகேசுவரி
தந்தருள்வாய் வரம் தாமதமின்றியே (ஏ)

28

**ராகம்—மத்திமாவதி** **தாளம்—ஆதி**

பல்லவி

நம்பிக்கை வைத்திடுவேன் உன்னை
நானும் பணிந்திடுவேன் இனி (ந)

சரணங்கள்

தும்பிக்கையானைப் பெற்ற தேவி உமையவளே
அம்பிகையே அருள் ஆனந்த வல்லியே (ந)
சொல்லும் பொழுதெல்லாம் இனித்திடும் உன்பெயரை
அல்லும் பகலும் உரைக்க அருள்வாயே (ந)
எல்லையற்ற உன் கருணைத் திறமறியாமலே
தொல்லை எல்லாம் தேடிக்கொண்டேன்
நான் ஆதலால் (ந)

29

ராகம்—ஜோன்புரி தாளம்—ஆதி

பல்லவி

பிறந்தபயன் அடைந்தேன் தேவி உன்
பெருமையெல்லாம் உணர்ந்தேன் தேவி (பி)

சரணங்கள்

இறைவியே இமயவன் செல்வியே நீயும்
அருளுருவோடு அன்றென் கனவிலே வந்ததால் (பி)
மறந்தும் இவ்வுலகிலே உழலவிரும்பேன்
விரைந்து வந்தே என்னை ஆண்டுக்—
கொள்வாயம்மா (பி)
பிறைமதி சூடிய பெருமானுக்கு சுந்தரீ
பெரியமனதுடன் எனக்கருள் செய்ததால் (பி)

30

ராகம்—கர்னாடக சுத்த சாவேரி தாளம்—ரூபகம்

பல்லவி

காமாட்சி கருணாகரி உன்
கழல் பணிந்தேன் என்னையாதரி (கா)

அனுபல்லவி

காமாக்ஷி விசாலாக்ஷி
வணங்கும் அன்பர் வாழ்வினில் இன்பம் தரும் மங்கள
தாயகி (கா)

சரணம்

ஏகாம்ப்ரேச மனோகரி
எங்கும் நிறை பரிபூரணி
ஸ்ரீகாஞ்சி புரீசுவரிஎன்
சித்தம் என்றும் உன்னை மறவாமல் இருந்திடவே
எனக்கருள் (கா)

31

ராகம்—மலயமாருதம் தாளம்—ஆதி

பல்லவி

அகிலாண்ட நாயகியே அருள் செய்ய வேண்டுமே
அடியேன் உன்னைவிட்டு எங்கே செல்வேனம்மா (அ)

அனுபல்லவி

அகமும் புறமும் நிறைந்திருக்கும் பராசக்தி
அனைத்தும் உணர்ந்த நீ என்வினைத் தீர்க்கலாகாதா (அ)

சரணம்

உனதிரு அடியிணைப் பணிந்திடும் ஏழை எனக்கு
ஒரு குறையும் வாராது உண்மை இதானே
எனக்குனதருள் தனை தந்தருளாவிடில்
இருந்துநான் பயனென்ன வருந்துவதையன்றி (அ)

32

ராகம்—துர்கா தாளம்—ஆதி

பல்லவி

உன்னடிப் போற்றுகின்றேன் கற்பகமே
வந்தருள் இக்கணமே (உ)

சரணங்கள்

அன்னையே ஆனந்தவல்லியே நீ என்றும்
என் மனம் உன்னையே நினைக்க அருள்செய் (உ)
வண்ண மயிலாகி மாதேவனைப் போற்றி
உன்னதமடைந்த உத்தமியே அம்மா (உ)
மின்னொளியைப்போன்ற வாழ்வின் சுழலிடை
என்னைத் தவிக்க விடாமலே ரக்ஷிப்பாய் (உ)

33

## ஊஞ்சல் பாட்டு

லாலி

ராகம்—குறிஞ்சி தாளம்—ஆதி

வைரமணிப்பந்தலிலே ரத்மைய ஊஞ்சலிலே
ரகுராமன் சீதையுடன் ஆடுவதை பாரடி
தங்கமணிப் பந்தலிலே செங்கமல ஊஞ்சலிலே
சொக்கருடன் மீனாட்சி ஆடுவதைப் பாரடி
முத்தான பந்தலிலே பவழமணி ஊஞ்சலிலே
முருகனவன் வள்ளியுடன் ஆடுவதை பாரடி
பொன்னான பந்தலிலே பூவான ஊஞ்சலிலே
மன்னன் கண்ணன் ராதையுடன் ஆடுவதை பாரடி

34

# ரங்கன் துதி

ராகம்—பாகேசுவரி தாளம்—ஆதி

பல்லவி

பக்தவத்சலன் பரமதயாளன்
பாண்டுரங்கன் புகழ்பாடு நீநிதம் (ப)

அனுபல்லவி

நித்ய மங்களம் தந்தேவிடுவான்
நம்பும் அன்பர் குறைதீர்ப்பான் (ப)

சரணம்

அடியார்க்கடியன் அபயபுஜபாதன்
ஆராவமுதன் அருளே தருவான்
இடையூறெல்லாம் தீர்ந்தே போகும்
இறைவன் ரங்கன் அருளாலே (ப)

35

ராகம்—ஹம்சானந்தி தாளம்—ஆதி

பல்லவி

பண்டரிநாதன் பதமே பணிந்து
பாடு நெஞ்சே நீ பாடு (ப)

அனுபல்லவி

தொண்டர்க் கிரங்கும் பேரருளாளன்
துணை ஒன்றேதான் பேரின்பம் (ப)

சரணம்

வாழ்விலும் தாழ்விலும் அவனது நினைவே
இருந்தால் போதும் எனதரும் நெஞ்சே
ஊழ்வினை யகற்றி உயர்பதம் அளிக்கும்
உத்தம தெய்வம் விட்டலன் அன்றோ (ப)

36

ராகம்—நாதநாமக்ரியா தாளம்—ஆதி

பல்லவி

போகலாம் வாரீர் போகலாம் பண்டரிபுரம்
போகலாம் இன்றே நாமே (போ)

சரணங்கள்

ஏகாதசி என்னும் திருநாளே
வரப்போகுது இன்னாளே (போ)

கருணாசாகரன் விட்டலரங்கன்
அருளே நாமே பெறுவோமே (போ)
கலியுகவரதன் புண்டரி காக்ஷன்
கழலினைப் பணிய விரைவோமே (போ)

37

## தாலாட்டு

ராகம்—கர்னாடகதேவகாந்தாரி தாளம்—ஜம்பை

ஆராரோ ஆரிராரோ அன்பே என் ஆரமுதே
ஆனந்த வெள்ளமே ஆணிமுத்தே கண்வளராய்

தேடாத செல்வமே நீ தீஞ்சுவையே தாலேலோ
வாடாத மாமலரே வயிரமே நீ கண் வளராய்!
தாலேலோ... தாலேலோ... தாலேலோ... தாலேலோ...
நான்பட்ட துன்பமெல்லாம் உந்தன் முகத்தழகைக் கண்டு
ஓடோடிப் போனதடி செல்வமே நீ கண் வளராய்
தவமிருந்து பெற்றேனே தங்கமே நான் உந்தனையே
பூவிதழே பொன்னழகே நலமுடனே கண் வளராய்
தாலேலோ... தாலேலோ... தாலேலோ... தாலேலோ...

38

## ஆண்டாள் துதி

ராகம்—சந்திரகௌஸ் தாளம்—ஆதி

பல்லவி

திருப்பாவை தனைதந்த அருட்பாவை நல்லாள்
திருவடிக்கே எனதனந்த கோடி வணக்கம் (தி)

அனுபல்லவி

அருள்நங்கை அன்றுமுதல் ஆழிமழைக் கண்ணனையே
அனவரதம் நினைந்தனளே அமுதமென இசைத்தனளே
(தி)

சரணம்

சூடிக்கொடுத்த சுடர்க்கொடியாள் பாடிப்பணிந்த
பைங்கிளியாள்
ஆடிக்களித்த அன்புருவாள் நாடிதுதித்த நாயகியாள் (தி)

39

# திருமால் துதி

ராகம்—ராகமாலிகை தாளம்—ஆதி

பந்துவராளி

நாளிதுவே நல்ல நாளிதுவே நம
தாண்டவன் கண்ணன் வந்துப் பிறந்த (நா)
மாளிகை தோறும் மண் குடில் தோறும்
மனம் மகிழ்ந்தானந்தமாகக் கொண்டாடும் (நா)

வசந்தா

எங்கோ பிறந்து இங்கே வந்தான்
எங்கள் உள்ளக் கோயில் அமர்ந்தான்
செங்கனி வாயால் தீங்குழல் ஊதி
சிறப்புடன் கோபியர் மனதில் அமர்ந்தான் (நா)

ஹிந்தோளம்

கம்சனைக் கொன்றான் காளிங்கனை வென்றான்
கோவர்தன கிரிதன்னைத் தாங்கியே நின்றான்
நம்பி வந்த அன்பர்களை வாழவும் செய்தான்
நச்சு மனம் கொண்டவரை அச்சுதன் வதைத்தான்
(நா)

காப்பி

ருக்மிணி சத்திய பாமை ராதை மீராவின் மண
வாளனுமாகி
பக்தியுடன் மலர்சூடிக் கொடுத்தவளின் மனம்
தன்னில் நிறைந்தவன் மணிவண்ணன் வந்துப்
பிறந்த (நா)

40

ராகம்—திலங் தாளம்—ஆதி

பல்லவி

மனமோகன கிரிதாரி முராரி (ம)

சரணங்கள்

கனகாம்பரதர கௌஸ்துபஹாரா
வனமாலா தர முரளி மாதவ (ம)
பக்த பரிபாலக க்ருஷ்ண கோபால
நித்ய கல்யாண குண சுந்தரரூபா (ம
நந்த முகுந்தா நவனீத சோரா
பிருந்தாவன கோவிந்தஜனார்த்தன (ம)

41

ராகம்—சோகினி தாளம்—ஆதி

பல்லவி

சொல்ல சொல்ல இன்பம்தரும் கண்ணன் திருநாமம்
தன்னை எண்ணிப் போற்றுவதே பேரின்பமாகும் (சொ)

சரணங்கள்

எல்லையில்லா கருணையுடன் உன்னையாள வந்திடுவான்
இன்னமுதம் போலே குழல்தன்னை எடுத்தூதுவான்
(சொ)
கல்லும் கனிந்துருகும் கன்றினமும் நின்றுவிடும்
கன்னியரும் தன்னை மறந்தாடவும் பாடுவர் (சொ)
நல்லவர் உள்ளத்தில் எல்லாம் இருந்தருள் புரிந்திடும்
நாரணன் கோவிந்தன் சியாமளவண்ணன் என்று
(சொ)

42

ராகம் — விஜயநாகரி தாளம்—ஆதி

பல்லவி

தீன சரண்யனே தேவகிபாலனே திருவருள் புரிவானே
மனமே (தீ)

அனுபல்லவி

கான விலோலனே கௌஸ்துப மாலனே கனகாம்பரதர
வனமாலாதரனே (தீ)

சரணம்

சியாமள ரூபனே ஸரஸிஜ நேத்ரனே
சகலபுவன பரிபாலனே சீலனே
மாமணி வண்ணனே மரகத கண்ணனே
மங்கையர் மனங்கவர் மாயனே ஆயனே (தீ)

43

ராகம்—ரஞ்சனி தாளம்—ஆதி

பல்லவி

உன்னைசில வரம் கேட்பேன் அதை
இல்லை என்று சொல்லவேண்டாம் கண்ணா (உ)

சரணங்கள்

பொன்னையும் பொருளையும் கண்டுடன் மனம் தளர்ந்து
பொய்யான வாழ்விலே உழலாதிருக்கநான் (உ)

மன்னுயிரை தன்னுயிராய் நினைத்திட வேண்டும் நான்
என் உடல் பொருளாவி எல்லாம் உனக்காக வேண்டும்
(உ)

44

ராகமாலிகை தாளம்—ஆதி

கமாஸ்

குழல் ஊதி விளையாடிஞன் கண்ணன் (கு)
கோபியர் ஆடையை கொள்ளையிட்ட கண்ணன்
கோவர்தன கிரியைக் குடையாய் பிடித்த கண்ணன் (கு)

ஹிந்தோளம்

ஆயர்பாடி தனிலவன் ஆநிரை மேய்த்துமே
ஆருயிர் ராதையுடன் ஆடிக்களித்த கண்ணன் (கு)

ஹம்ஸாநந்தி

தயிர் வெண்ணெ பாலுடன் தையலருள்ளமும்
தன் வயமாக்கிய தாமோதரனும் என்முன் (கு)

சிந்து பைரவி

அண்ட சராசரம் அன்னைக்குக் காட்டிய
ஆயர் குலச்சிறுவன் ஆனந்தக் கனவினில் (கு)

45

ராகம்—ஷண்முகப்ரியா தாளம்—ஆதி

பல்லவி

அருளே நீ புரியாயோ அரங்கா இத்தருணம் உன்
அழகான வாயாலே கலங்காதே வருவேன் என் (அ)

அனுபல்லவி

இரவென்றும் பகலென்றும் பாராமல் உன்னையே நான்
துதித்தேனே இசைத்தேனே எளியேனுன் பதம் சேர
(அ)

சரணம்

கரை ஏறும் வழியின்றி கலங்குகிறேன் இங்கே நான்
காலம் கடந்தே நீ வந்தாலும் பயனில்லை
உரைத்தாயே உன்னையே நான் மறவேன் என்றன்னுளில்
உலகளந்த மாயவனே எனதாசை காவலனே (அ)

46

ராகம்—ஹமீர் கலயாணி தாளம்—ஜம்பை

பல்லவி

கண்ணன் மணிவண்ணன் பேரை சொன்னதும் என்
உள்ளத்திலே
கற்கண்டு போல் இனிக்குதடி காரணமும்
நானறியேன் (க)

அனுபல்லவி

வண்ணமலர் தேனை கண்டு ஆசையுடன் உண்டவண்டு
போலேமனம் சுழலுதடி அன்னவனை காண்கிலேனே (க)

சரணம்

எண்ணமெல்லாம் கண்ணன் வடிவழகினிலே லயித்து
இன்னதென்று புரியாத உணர்விலே மகிழுதடி
பண்ணிசைக்கும் வாயனவன் பார்வையொன்றே
போதுமடி
வந்தெனக்கே அருள விரைந்தவன் வாரானோ! (க)

ராகம்—ப்ருந்தாவன சாரங்க தாளம்—ஆதி

47

பல்லவி

மோகன ஸ்யாம ஹரே ஜகன் (மோ)

அனுபல்லவி

ராக ஸுதாரஸ ஸாரஸ லோசன (மோ)

சரணம்

கோகுல பால கோபால முராரி
கோவர்தன கிரிதர சுந்தர (மோ)
யாதவ மாதவ யமுனா விஹாரி
யதுகுல திலகம் தேஹி முதம் ஸ்ரீ (மோ)

48

ராகம்—சிந்துபைரவி தாளம்—ஆதி

பல்லவி

நிஜசுகம் வேண்டுமென்றால் மனமே
நித்ய நிரஞ்சன அம்புஜ கண்ணனை நினை (நி)

சரணங்கள்

கஜராஜனுக் கபயம் தந்தவனை க்ருபா
சாகரனை நந்தபாலனையே நினை (நி)
பவவினை அகற்றி பரமபதம் தரும்
பரமதயாளனை பக்தியுடன் நினை (நி)

49

## மும்மூர்த்தி துதி

ராகம்—ராகமாலிகை தாளம்—ஆதி

பைரவி

சங்கீத சாகரத்தின் கரைகண்டப்—பேர்களுள்
சிறந்த இம்மூவர்களின் சரிதம் விசித்ரம்

மோகனம்

மங்காமல் மறையாமல் என்றும் நிலைத்திருக்கும்
மணியான சாகித்யம் பல தந்த தியாகராஜர்

தன்யாசி

முத்தான இசையாலே தம் இஷ்ட தெய்வங்களை
பூஜித்து பேரின்பம் அடைந்தார் நம் தீக்ஷிதர்

மத்தியமாவதி

ஸ்யாம க்ருஷ்ண முத்ரையுடன் பாடல்களை
புனைந்தளித்த
சாஸ்திரியார் செய்த நல்ல நல்ல கீர்த்தனத்திற்
கிணை ஏது?

50

ராகம்—சுருட்டி மங்களம் தாளம்—ஆதி

பல்லவி

மங்களமே தரும் தெய்வம் அன்றோ சுப (ம)

சரணங்கள்

மங்களமே எங்கும் பொங்கிடவே ஜக
தீசன் ரகுராமன் பேரை சொன்னால் போதும் (ம)
சிந்தையிலே நல்ல எண்ணமும் ஓங்கிட
சீதை மணவாளன் தன்னை நினைந்திடில் (ம)
எந்நேரமும் பணிந்தன்புடனே போற்றி
இன்னருள் பெறவே எல்லோரும் வாருங்கள் (ம)

## சீதா கல்யாண நாட்டிய நாடகப்பாடல்

ராகம்—பௌளி தாளம்—ஆதி

ராஜனை தசரதன் அரசினை ஆள்கையிலே
ராஜரிஷி விசுவாமித்ரன் நல்லதொரு எண்ணம்கொண்டு
ராஜசபை தன்னில் வரமன்னன் உபசாரம் செய்து
ரத்னமய பீடத்திலே வைத்துப் பணிந்தாரே

### தசரதர்

ராகம்—பியாகடை தாளம்—ஆதி

அருள்வடிவே வருக மெய்ஞான
பொருள் வடிவே வருக (அ)
திருவுள்ளம் தன்னில் எதைநினைத்து வந்தாலும்
தயவுடனே சொல்லும் செய்திடுவேன் திண்ணம் (அ)

### விசுவாமித்திரர்

ராகம்—கேதாரகௌளை தாளம்—ஆதி

எனக்குதவி செய்வாயே மன்னனேநீயும் (எ)
வனத்திலே தவம் செய்யும் முனிவர்களைகொடும்
துன்பத்தில் ஆழ்த்திடும் அரக்கர் மடியவே (எ)

ராகம்—கேதார் தாளம்—ஆதி

## தசரதர்

காத்திருக்கிறேன் உங்கள் ஆக்கினைக்கே என்றும்
கருணையுடன் சொல்லும் கௌசிகரே ஐயா
நேர்த்தியுள்ள படையாவும் இருக்குதிங்கே
நானும் வந்தும் குறைதீர்த்திடுவேன் ஐயா

## விசுவாமித்திரர்

ராகம்—சாரங்கா தாளம்—ஆதி

படைஎதற்கு உந்தன் பலம் எதற்கு மன்னனென்
பக்கந்தனில் இருக்க ராமனே போதுமே
தடையே நீ சொல்லாமல் தந்திடு மைந்தனை
தசரதனே எல்லாம் நன்மைக்குத்தானே!

## தசரதன்

ராகம்—ஷண்முகப்ரியா தாளம்—ஆதி

என்னநீர் சொல்வது ஏழையிடம் வந்து
ஏளனம் செய்வது ஆகுமோ ஸ்வாமி
சின்னஞ்சிறுவனை கொண்டென்ன செய்வீர்
சிங்கத்தைப்போலவே நானும் இருக்கையில் (எ)

## விசுவாமித்திரர்

ராகம்—முகாரி தாளம்—ஆதி

சொன்னசொல் தவறுதே மன்னவனே நீ (சொ)
இன்னலைத் தீர்ப்பதும் இன்பத்தை அளிப்பதும்
மன்னவனுகிய உன்கடமை அன்றோ (சொ)

ராகம்—மலயமாருதம் தாளம்—ஆதி

வந்தமகான் வார்த்தை தன்னை மீறவும்
பயந்த மன்னன்
மைந்தன் ராமன் தன்னை உடன்வரவழைத்தாரே
சிந்தை கலங்கி இருவிழிகளில் நீர்சோர
எந்தவிதம் உன்னைப் பிரிந்திங்கு நான் வாழ்வேன்
என்றார்

## தசரதன்

ராகம்—சிம்மேந்திரமத்யமம் தாளம்—ரூபகம்

கானகம் செல்லவோ உன்னைப் பெற்றேனடா
கண்மணி ராமனே பாவியும் ஆன நான்
வானமும் வையமும் வாழ்த்திமகிழும் உன்
வாய் சொல்லைக் கேளாதென்னாவி நிலைக்குமோ

## விசுவாமித்திரர்

ராகம்—பிலகரி தாளம்—ஆதி

அஞ்ச வேண்டாம் அஞ்ச வேண்டாம்
அன்பான என் தசரதனே
அன்புடனே நீ தருவாய் உந்தன் செல்வத்தை
அன்னையைப் போல் காத்திடுவேன்
வஞ்சகர்களை அழித்தென் சஞ்சலத்தையும் ஒழித்து
வந்திடுவான் மங்களமாய் உந்தன் கண்மணி
வானச்சுடர் போலவேதான்

ராகம்—முகாரி

விருத்தம்

மனதினில் கலக்கம் நீங்கி மைந்தரைப் பார்க்க மன்னன்
வணங்கி பாலன் ராமன் விடையதும் கேட்டு நின்றான்

ராமன்

ராகம்—சுருட்டி தாளம்—ஆதி

போய் வரவிடை தாரும் என் கோவே நான் (போ)
சேய் என்று எண்ணுமல் போய்வா என்று உங்களை
பொன்றனை வாயினுல் நல் ஆசி தந்துநீர் (போ)

ராகம்—கீரவாணி தாளம்—ஆதி

உத்தமனும் ராமச்சந்திரன் அன்புடைய தம்பியுடன்
சென்று யாகம் தன்னைக் காத்து ஆசிபலப்பெற்ருன்
பித்தன் இந்திரன் செய்வினையால் கல் உருவாய் ஆன ஒரு
உத்தமிக்கும் வாழ்வளித்து மிதிலைநகர் வந்தான்

ராகம்—ஆபோகி தாளம்—ஆதி

ஜனக ராஜன் பெற்ற திரு செல்வி ஜானகியும் அப்போ
கன்னிமாடம் தன்னில்வர கண்டராமன் அதிசயிக்க
தன்னை மறந்த அவள் முகம் மலர்ந்தே நின்ருள்
கண்ணேடு கண் நோக்கியதே கருத்தொன்று பட்டதே

சீதை

ராகம்—தோடி தாளம்—ஆதி

சுகுமாரன் இவர் யாரடி என் மனம் கவர்ந்த (சு)
ஜகஜ்ஜோதி வடிவாய் இந்நகர் வீதிதனில் மேவும்
திருமாலின் அவதாரம் என்றெண்ணத் தோணுதிந்த (சு)

## தோழி

ராகம்—கல்யாணி தாளம்—ஆதி

பரந்தாமன் ரகுராமனே இங்கு வந்தவன் (ப)
ஒரு பாவம் அறியாத தவயோகியரை வாட்டும்
அரக்கரை வதைத்தந்த அகலிகை சாபம் தீர்த்த (ப)

ராகம்—ஹிந்தோளம் தாளம்—ஆதி

நந்தவனம் தன்னில் ஓர்நாள் தோழிப் பெண்களுடன் கூடி
பந்துவிளையாடும்போது வில் அடியில் சென்றதது
சுந்தரியும் தயங்காமல் பந்தெடுக்க வில் எடுத்தாள்
இந்த அதிசயம் தன்னைக் கண்டவரும் வியந்தனர்

ராகம்—சிவரஞ்சனி தாளம்—ஆதி

யார் வந்து அசைத்தாலும் அசையாத சிவ தனுசை
அரைநொடியில் எடுத்த மகள் தன்னை மணக்க ஒரு வீரன்
இருப்பானோ பார்ப்போம் என்றெண்ணிய ஜனகன்பல
தேசத்து ராஜர்களையும் அழைத்தானே மண்டபத்தில்

ராகம்—சக்ரவாகம்

விருத்தம்

அரும் பெரும் தனுர் வளைக்க யாரும் முன் வருவர் இல்லை
என்றறிந்த நம் ஜனகன் மிக சோகமதும் கொண்டார்

ராகம்—காம்போதி தாளம்—ஆதி

இந்த வில்லை வளைத்து என் மகளை மணக்க
எவரும் இல்லையோ புவியில் என் செய்வேன்
அந்தமுள்ள ராஜர் பலர் வந்து வந்து போகிறார்
அசைக்கமுடியாமலே மயங்கியே சாயுறார் (இ)

**ராகம்—ஹேமவதி** **தாளம்—ஆதி**

வருந்துவதேனோ என் ராஜாதி ராஜனே
வந்திதைப் பார்த்துள்ளம் ஆனந்தம் கொள்ளுவீர்
வீராதி வீரன் என் ராமன் இந்த வில்லை
வளைத்துந்தன் செல்வியை மணந்திடுவான் திண்ணம் (வ)

**ராகம்—மத்யமாவதி** **தாளம்—ஆதி**

தேவாதி தேவரெல்லாம் பூமாரிப் பொழிந்திடவே
ஸ்ரீராமச்சந்திரன் அந்த சிவதனுசை வளைத்தனனே
தேவி மனம் மகிழ்ந்துடனே ஓடிவந்து மாலையிட
தவம் இருந்துப் பெற்றவரும் மற்றவரும் வாழ்த்தினரே

**ராகம்—காபி** **தாளம்—ரூபகம்**

மங்கள ஆரத்தி கொண்டோடி வாருங்கள்
செங்கமலத்தாளன் சீதையுடன் வாரான்
பொங்கும் மகிழ்வுடன் பாடி மகிழ்ந்தாடி
புண்ணிய மூர்த்தியின் புகழினைப் போற்றுவோம்.

# ஸ்துதிமணிமாலை

முதல் பாகம் (இரண்டாம் பதிப்பு)

ராகலட்சண ஸ்வர தாள குறிப்புடன்
கூடிய 51 பாடல்கள்

இயற்றியவர்
நீலாராமமூர்த்தி

விலை. ரூ 2-50

இரண்டாம் பாகம் விரைவிலேயே
வெளி வருகிறது.

தபால் செலவு தனி

கிடைக்குமிடம்
நீலா பப்ளிகேஷன்ஸ்
9, ஸ்ரீனிவாசன் தெரு, மதருஸ்-28

எம்மிடம் கிடைக்கும் இவ்வாசிரியரின் பிற நூல்கள்!

## கிருஷ்ண பிரேம கானம்

ஆண்டாள் நாட்டிய நாடகம்
பாடலுடன் கூடியது!

விலை ரூ. 1-25. தபால் செலவு தனி.

## கந்தன் புகழ் மாலை

வள்ளி கல்யாணப் பாடலுடன் கூடியது

விலை ரூ. 1-00. தபால் செலவு தனி.